[16th February 1959

SRI M. ETHIRAJALU : தென்னாற்காடு ஜில்லாவில் உள்ள விவசாயிகள் தங்கள் கோரிக்கையை ஜில்லா விவசாய அதிகாரிக்குத் தெரிவித்து, அவர்கள் மூலமாக சர்க்காரிடம் இன்னும் அதிகமாகப் பூச்சி மருந்து அல்லாட்மெண்டு வேண்டும் என்று கேட்டுக்கொண்டார்களா ? அப்படியானால் அதன் பேரில் சர்க்கார் என்ன நடவடிக்கை எடுத்தார்கள் ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : அரசாங்கத்தினிடம் ஒன்றும் தகவல் இல்லை. இருந்தபோதிலும், முதலிலே ரூ. 15,000 வரையிலே ஒதுக்கப்பட்டிருந்தது. இதற்குக் கொடுப்பதற்கு அதற்கு மேலே அவசியம் ஏற்பட்டு, ரூ. 2,550 அனுமதிக்கப்பட்டது.

SRI G. KRISHNAMOORTHY : Before further liberalization of the use of these pesticides, will the Government kindly appoint a Committee to go into the question of the bad effects produced by these pesticides?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : I do not think there is any need for appointing such a committee.

*Loan for purchase of tractors.*

* 45 Q.—SRI M. ETHIRAJALU : Will the Hon. the Minister for Home be pleased to state—

(*a*) the number of applications for loan for purchase of tractors pending sanction with the Director of Agriculture and the Government;

(*b*) the number and the amount of such loans sanctioned during 1957–58; and

(*c*) the amount now available for the issue of tractor loans during the year 1958–59?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) With the Director of Agriculture—135. With the Government.—Nil.

(*b*) 19 tractors at a cost of Rs. 3,62,038.00 nP.

(*c*) Rs. 10 lakhs.

SRI M. ETHIRAJALU : மூன்றாவதாகச் சொல்லப்பட்ட 10 லட்சம் ரூபாயில் 1958–59-ம் வருஷத்திற்குக் கொடுக்கப்பட்டது என்று சொல்லும் பொழுது, இன்னும் 1959-ம் வருஷம் முடிவதற்கு ஒரு மாத காலம் தான் இருக்கிறது. ஆகவே, அந்தப் பணம் பூராவும் கொடுக்கப்பட்டிருக்கிறதா, அல்லது இனிமேல் ஏதாவது கொடுக்கப் போகிறார்களா என்பதை அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI M. BHAKTAVATSALAM : விவசாய இலாகா டைரக்டர் அவர்கள் மனுக்களைப் பரிசீலனை செய்து, அவர்கள் ஜில்லாவாரியாக வகுத்து அனுப்பினால், அதற்கு மேலே இந்தக் கடன் தொகை ஒதுக்கப்பட்டது செலவழிக்கப்பட்டிருக்கிறதா என்று சொல்ல முடியும்.

SRI M. ETHIRAJALU : ஜில்லாவில் இருக்கக்கூடிய ஏழை விவசாயிகள் டிராக்டர்கள் வேண்டுமென்று ஜில்லா விவசாய அதிகாரிகளிடம் முறையிடுகிறார்கள். ஜில்லா விவசாய அதிகாரிகளிடத்தில் டிராக்டர்கள் கொஞ்சம்தான் இருக்கின்றன. ஆகவே, எல்லாத் தாலூகாக்களிலுமுள்ள

ஏழை விவசாயிகளுக்கும் டிராக்டர்கள் கிடைக்க வேண்டுமானால், ஒவ்வொரு தாலூகாவிலும் ஒரு டிராக்டர் வைப்பதற்கு அரசாங்கம் ஏதாவது உதவி செய்யுமா என்று கேட்க விரும்புகிறேன்.

THE HON. SRI M. BHAKTAVATSALAM: இந்தக் கேள்வி வேறு விஷயத்தைப்பற்றியது. முதலிலே, அங்கத்தினர் கேட்டதுபோல், இது ரொம்ப ஏழை விவசாயிகளுக்கான திட்டம் அல்ல. கொஞ்சம் சுமாராக நிலம் வைத்துக்கொண்டிருப்பவர்கள் சொந்தமாக டிராக்டர் வாங்குவதற்குக் கடனைக் கொடுத்துத் திருப்பி வாங்கும் திட்டம் இது. அது அல்லாமல் விவசாயிகளுக்கு டிராக்டர்கள் வாடகைக்குக் கொடுக்கப்படுகின்றன.

*Training course for Hindi Pandits*

* 46 Q.—SRI G. KRISHNAMOORTHY: Will the Hon. the Minister for Finance be pleased to state whether there is any proposal before the Government to institute training courses for Hindi Pandits?

THE HON. SRI C. SUBRAMANIAM: No, Sir.

SRI G. KRISHNAMOORTHY: Are the Government aware of the fact that there is no separate training course for Hindi Pandits and that the course conducted by the Hindi Prachar Sabha is one in Literature *plus* some training, the duration of which is ten months or so? (In view of the fact that even Oriental Title-holders are compelled to undergo this course in Literature, will the Government see that they provide a separate course under the auspices of the Hindi Prachar Sabba or under the auspices of the Government themselves, say, for a duration of five months or so?

THE HON. SRI C. SUBRAMANIAM: So far, I have not heard of any complaints about this. But, if there is a real grievance and if any representation is made in this regard, it will be looked into.

SRI G. KRISHNAMOORTHY: Sir, the real grievance is there. Many representations have been received by me and I have been repeatedly making a mention of this on the floor of this House on many occasions. So, will the Government kindly see that a separate training course is run either by the Hindi Prachar Sabha or by the Government themselves so that at least the Oriental Title-holders of the Madras University may not be asked to undergo an inferior course before they get this training?

THE HON. SRI C. SUBRAMANIAM: I have already answered the question If any written representation is made, I shall look into it.

SRI T. P. SRINIVASAVARADAN: Have any complaints from any of the trainees in the institutions conducted by the Hindi Prachar Sabha been received that the training was far from satisfactory?

THE HON. SRI C. SUBRAMANIAM: Not to my knowledge, Sir.